எட்டுகுடி

ஸ்ரீ சுப்ரமணியர் பேரில்

பிரம்மானந்த சங்கீத கீர்த்தனை

உ

சிவமயம்.

எந்தளோரமும் கந்தநாதனே துணை

எட்டுகுடி

ஸ்ரீ சுப்ரமண்யர் பேரில்

# பிர்ம்மானந்த சங்கீத கீர்த்தவண



இஃது

நாகபட்டணம் தாலுக்கா குருச்சி போர்டு எலிமேன்டரி ஸ்கூல் ஹெட்மாஸ்டர் S. N. நடராஜ நாயனுரின் மாணுக்கரிலொருவரும், நேர்த்தனமங்கலம் V. I. துரைசாமி நாயனுரின் குமாரநும், ஷை தாலுக்கா அழிஞ்சமங்கலம் கவர்ன்மேன்ட் எலிமேன்டரி ஸ்கூல் ஹெட்மாஸ்டருமாகிய

**V. I. D. அம்பலவாண நாயனுரால்**

இயற்றப்பட்டதை

திருத்துறைப்பூண்டி தாலுக்கா நீர்முளை

**அல்லாப்பிச்சை ராவுத்தர் அவர்களால்**

பார்வையிட்டு

... V. I. D. A. நாயனுரால்,

... ஸ்காட்டிஷ் பிரான்சு பிரஸில் ...ப்பிக்கப்பட்டது.

1923. [உரிமை] 1



உ

சிவமயம்.

எட்டுகுடி

ஸ்ரீ சிவசுப்ரமண்யர் பேரில்

# பிர்ம்மானந்த சங்கீத கீர்த்தனம்.

கீர்மூலை, ஸ்ரீமான்

அல்லாபிச்சை ராவுத்தர் அவர்களால் இயற்றிய

சாற்றுக்கவி.

விருத்தம்.

இம்மையெனும் இசமதிலெண் திசையும் பார்த்தேன்
என்மனதிற் கினியமொழி இசைப்பாரில்லை
தெம்பையளித் தெழுமுகிலு மொன்றதாகி
தேன்மாரி தமிழ்க்கவியின் வெள்ளமேவி
கம்பர்முதல் காலையேரின் கவிகளெல்லாம்
கலியுகத்தில் கண்காணு தெளிதமாத்தம்
அம்பலவாணன் கவியிவ் வகிலமீதில்
ஆனந்தம் புகட்டுதென வரைகுவேனே.

வெண்பா.

இன்பம் தருங்கதலி இனியகன்னல் தேனுபாலும்
உண்பதற் கானந்த மிகவுற்றநவே—செந்தமிழில்
அம்பலவாணன் கவியை அறிந்தானந்திக்க
சத்ததமும் சகிதமென சாற்று.

முக்கனியும் சர்க்கரையும் மூஷிகனேயர னுமக்கு
தக்கபடியே யளிக்க தாரணியில்—எக்கணமும்
இனியமவர் தேனதிலும் இனிக்கும் செந்தமிழதனை
கவியுடனே தந்தெனக்கு கார்.

ஆறுமுகத்தோனே அரவம்பூண்டோன்மகனே
பாரும் மங்கையற்கண்ணி பாலகனே—நீரும்
செந்தமிழாலுன்னறிய சேவடியை யான் துதிக்க
வந்தருளும் வடிவேலா வா.

புள்ளிமயிலேறி புவியதனை ஓர்நொடியில்
துள்ளிவலம்வந்த துய்யனே—வள்ளி
மணவாளா எந்தன் மனக்குரங்கே யோர்வழியாய்
குணமாக்குவாய் என் குகா.

(வடிவேலுமயிலும்துணை என்ற வர்ணமெட்டு.)

பல்லவி.

விக்ன வினாயகனே ஓம் விக்ன வினாயகனே.

அனுபல்லவி.

வேதாமறைமூதா அருள்தாதா என்மேல்வரீதா.

சரணம்.

பக்தர்கள் கொண்டாடும் அத்திமுதல்வோனே
பாரில்உனையன்றி வேறில்லையேகோனே
ஓதும் சிறுவனுக் குகந்தருள்சீமானே
உந்தன் பதம்தேடி நைந்தேன் தினம்நானே

உத்தமனே நித்தியனே
கத்தினேனே முத்திபெற. (விக்ன)

நல்வினை தீவினை ரெண்டுக்கும் நாயகா
நம்பாதவர்களுக்கேயுண்டு வுபாயகா
வெம்பிவந்தோரை விரும்பிடும் நாயகா
வேண்டும் வரங்களை தந்திடும்மூழிகா

வேதமதில் தானெழுந்து
வேட்டகத்தில் தான்விழுந்து
தாகமதை தேடிநின்ற
தம்பியின் வார்த்தைக்குகந்து

திடுதிடுரென தினைவனமதில் மடமயில்மனம் படபடவென
மாதுவள்ளியைத்தூக்கி மஞ்சமதில்தானிருத்தி
சூதுசெய்து வந்தசிவ சுப்ரமண்யனுக்குமூத்த (விக்ன)

மாதர்களாசை மயக்கத்தை நீக்கிடு
மாபாவியான மதன் அம்புபோக்கிடு
தீவிரமாக மனந்தனில் நின்றிடு
தேடியுன்பாதமம் பலவாணனன்போடு

தேசமதில்தான் புகழ்ந்து
பூசைநைவேத்திய முகந்து
ஏஹிவரும் பாலர்களை
எப்பொழுதுந் தானறிந்து
இன்பமுடன் தோசைவடை
அன்புடனே கொள்பவனே
கறபகத்தே மெய்ப்பொருளே
கண்காணு உன்னருளை
நின்கிருத்தினமங்கலம்
நேர்மையுடன் நின்றிலங்கும். (விக்ன)

(எங்கும் புகழ்பெற்ற என்ற வர்ணமெட்டு.)

பல்லவி.

1. கண்டோம் கண்டோமே கந்தன் திருபாதம்
தொண்டு செய்தோமே திவ்விய பிரசாதம் (க)

2. வளயல்விற்கும் செட்டியென்று வற்புருத்தம் கூறிநின்று
களையாய் வருகுதடி காமனாலே என்றவனே (க)

3. கங்கணங்கள் விற்கையிலே கானின்வேடர் வந்திடவே
சங்கடந்தான் என்றுசொல்லி சாமிவேடம் பூண்டவனே

4. தள்ளாத கிழவனென்று தடிவூன்றி நின்றுகொண்டு
தெள்ளு தினைமாவுந்தேனும் வள்ளியே நீதா என்றோனே

5. மாவைப்புசித்தவுடன் மன்னையிலடைக்குதடி
கோவே எனக்கு யிப்போ கொஞ்ச ஜலம்தாயென்றோனே

6. தண்ணீர் சுனைக்கழைத்து தாகமதை தீர்த்தவுடன்
பெண்ணே யுந்தன்மனது அஞ்சாதே யென்றவனே (க)
7. மாதுகயல்விழியின் மனமதை யறியுமுன்னே
வேடர்களை கண்டுதானும் வேங்கைமரமாய் நின்றோனே
8. வள்ளி திரும்புமுன்னே வனவேடர் சென்றபின்னே
கள்ளத்தனமாய் வெள்ளானை கடிகியே வரச்செய்தோனே
9. பண்டாரம் யென்றுசொல்லி பாசாங்குசெய்துதுள்ளி
தண்டாமரைமலர்தாள் தற்பரனே இப்பொழுது (க)
10. வண்டாரம் பூங்குழலின் வள்ளிதனை யணைத்து
ஜெண்டாய் சிறையெடுத்த சிங்கார வேலவனே (க)
11. புள்ளிமயில் மீதேறி வள்ளிதெய்வானையுடன்
துள்ளிவிளையாடுகின்ற தூயகார்த்திகேயனேயே (க)
12. எந்தனுக்குரைத்தகுரு எஸ். என். நடராஜனையா
வந்தனங்கள் செய்துபாடும் வி. ஐ. டி. எ. பாலனையா (க)

(செந்தமிழே என்ற வர்ணமெட்டு.)

1. கங்கையைத்தரித்ததிரு சங்கரன் புதல்வனான
சிங்கார வடிவேலனே—செங்கைலோலனே
சேவற்கொடிகள் பூண்டோனே
ஜெகமதிலுந்தனின் மகிமைதனையறிய
கனவதுகொண்டுதீ வனமதிலலைகிறேன்
மங்களகல்யாணலோலனே—எனைத்தள்ளாதே
புங்கவா புலம்பலானனே. (கங்)

2. நாரதர் வார்த்தையைநம்பி பாராமல்குறத்திதன்னை
பக்ஷமுடனே யணைந்தோனே—வேடரைக்கண்டு
தக்ஷணமரமாய் நின்றோனே
விரைவிலுன் தரிசனம் வேண்டினேன் பதம்தரும்
மறைபுகழ் தேவர்களனுதினம் துதிசெய்யும்
மாமலரடிதேடினேன்—மால்மருகா வுன்
மகிமையறிய நாடினேன். (கங்)

3. எந்த நகர்தனிலும் உந்தன்புகழைப்பற்றி
ஓடிவாரார்கள் சிலபேர்—உந்தன்பாதத்தை
தேடிவாரார்கள் பலபேர்
உன்னதமாகவே ஓடிவருபவர் ஒருவருமறியாத
சிறுவயதருள்பூண்ட
ஓங்காரசத்திவேலனே—உமைபாலனே
நீங்கா தருள்தா சீலனே (கங்)

4. உந்தன் மகிமைதனை உரைப்பதற் கெந்தனது
ஒருநாவுதானும் போதுமோ—இபலாஷையா
எந்தன்மேல் வர்மமாகுமோ
எட்டுகுடியிலமர்ந்திடு ஈசனே
பட்சமுடன் பணிந் தேனுன்சேயனே
எந்தன்குரு நடராஜனே சொந்தமாய்காந்த
வந்தனம் அம்பலவாணனே.

(பழனிமாமலையில் வாழும் என்ற வர்ணமெட்டு.)

1. எங்கும் நிறைந்ததிரு செங்கைவடிவேலா
செங்கைவடிவேலா மங்களகுணாளா (எங்)
2. ஆறுமுகத்தை மாற்றி ஆண்டியைப்போல் வேடம்பூண்டு
அத்தியை நினைத்தழைத்த சித்ரமயில்வேலா (எங்)
3. தேனுந் தினைமாவும் திரட்டியே கொடுக்க
தின்னுகையில் விக்குதென்ற தேவா என்னை காவா (எங்)
4. தள்ளாடி தள்ளாடி தடிகொண்டு ஊன்றி
தந்திரமாகச் சென்ற பாலா வடிவேலா (எங்)
5. தந்தைக்குபதேசித்த மந்திரமணி மார்பா
தமியேனுனைத் துதித்தேன் தாளடிதா பூபா (எங்)
6. புள்ளிமாமயிலேறி வள்ளிதெய்வானையுடன்.
புண்ணியனே முருகா போற்றினேனே அருள்தா (எங்)
7. எந்தவேளைதனிலும் வுந்தன்பதிதேடி
மைந்தன் சொந்தமதாய் வந்தனம் செய்தேன் கோடி
8. எந்தன் குருவாகிய எஸ். என். என். தாசன்
சிந்தையில் துதிக்குமம்பலவாண விஸ்வாஸன் (எங்)

(பாலராமனையனே என்ற வர்ணமெட்டு.)

பல்லவி.

கந்தனே தருவாய் விரைவாய்
கந்தனே தருவாய்

அநுபல்லவி.

கந்தனே உந்தன் செந்தாமரைப் பாதத்தை (கந்த)

சரணம்.

1. எந்தவேளையிலு முந்தனைநாடியே
செந்தாமரைப்பாதம் சொந்தமாய் தேடியே
வந்தனம்செய்து வணங்கினேன் கோடியே
தந்தைக்குபதேசம் தந்தாய் முன்னாடியே

இப்புவியில்யான் உறவே
சுப்பிரமண்யதாள் பெறவே (கந்)

2. கானக்குறத்தியின் மேலாசை வைத்தோனே
கானவேடர்கள் கண்டு ஒளிந்தோனே
வேணதிணைமாவை வேண்டிப்புசித்தோனே
வேங்கைமரமாகி பாங்குடன் நின்றோனே

பாடிமனம் வாடிதினம்
ஓடிடுதே நாடியருள் (கந்)

3. வித்தைபுத்திசெல்வம் வேண அளிப்போனே
முத்துமணியதை கோத்தாயணிவோனே
சித்தாய் ஒருகோடி சென்றுவருவோனே
சத்தி வேல்தன்னையே நித்தம் தொழுவோனே

எத்திசையும் தான்புகழும் எட்டுகுடிவேலவனே
சுத்தியுனை கத்தினேனே சுப்ரமண்யதேசிகனே (கந்)

4. அத்திமுகவன்றனக்கு இளையோனே
எத்தினமுமாளும் சித்திவிசாகனே
அன்பான எந்தன்குரு நடராஜனே
இன்பமாய்பாடிடு மம்பலவாணனே

காரும் கண்பாரும் வினைதீரும்
அருளே நிறைவாய் (கந்)

(கந்தநாதனே என்ற வர்ணமெட்டு.)

1 செந்திவேலனே இந்தவேளை
சிறியவன்படுந் துயர் போக்கியே
துரிதமாய் நீயருளே தந்திட (செ)

2 மாசில்லாத மான்மழுவேந்தும்
மந்திரசடாக்ஷர பாலனே
சம்ரசல்லாப உல்லாசனே (செ)

3 புள்ளிமாமயில் வேலணிந்தே
வள்ளிதெய்வானை யுடனே
துள்ளிவிளை யாடுகின்ற (செ)

4 ஆண்டியைப்போல் வேடம்பூண்ட
ஆறுமுக வேலவனே
அண்டினே னுன்பாலகனே (செ)

5 எஸ். என். நடராஜனென்குரு
சிஷ்யனம்பலவாணன் செப்புவதை ஒப்பிடுவாய் (செ)

வாழி.

ஆறுமுகமானகுரு பாதம்வாழி
அன்னைவள்ளி தெய்வானை நாளும்வாழி
பாருலகில் எனையீன்றோர் என்றும்வாழி
பக்ஷமுடன் ஓதிவைத்த குருவும் வாழி
சீருலகில் கல்விமிகக் கற்றோர்வாழி
சிறப்புடனென் மொழிகேட்போர் படிப்போர்வாழி
கூறுமென்தனுரைகுற்றம் கொள்ளார் வாழி
குற்றமற்ற நற்றவத்தோர் முற்றும்வாழி.

சுபம். சுபம். சுபம்.

முற்றிற்று.



S, B. P, N. 23-197.